[23rd March 1961

பட்டுள்ளது. மீதித் தொகையைக் கணக்கரின் பூர்வீக சொத்திலிருந்து திருப்பிப் பெற தஞ்சாவூர் கலெக்டர் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

SRI A. VEDARATHNAM : இந்த நிதியைக் கையாள்கிறவர்கள் போதுமான நிதி இல்லாதவர்களாக இருப்பதனால் இந்த நிலைமை ஏற்பட சந்தர்ப்பம் வருகிறது ; ஆகவே நிதியைக் கையாள்பவர்களிடமிருந்து தகுந்த செக்யூரிடி வாங்கி, அப்படி உள்ளவர்களை ப்ளாக்குகளில் நியமிக்க ஏற்பாடு செய்ய அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவசியமாக இருக்கக் கூடிய கேசுகளில் ஜாமீன் தொகை வாங்கப்படுகிறது. இந்த இடத்தில் பெற்றார்களா என்ற விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை.

*Co-operative Hand-pounded Rice Industry Society in North Madras (misappropriation)*

*1021 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட சென்னையிலுள்ள கூட்டுறவு கைக்குத்தல் அரிசி தொழில் சங்கத்தில் 6,000 ரூபாய்க்கு மேல் மோசடி ஏற்பட்டிருப்பது உண்மையா ?

(இ) அதற்குப் பொறுப்பாளிகளின்மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No Sir, but a sum of R.s 2,425·59 has not been properly accounted for in the Cash Book of the North Madras Handpounding Rice Workers' Co-operative Society, Limited.

(b) An enquiry is being conducted into the matter.

SRI V. K. KOTHANDARAMAN : எவ்வளவு காலமாக விசாரணை நடத்தப்பட்டு வருகிறது ? விசாரணை முடிய இன்னும் எவ்வளவு காலம் பிடிக்கும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு காலமாக என்ற விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை ; எப்பொழுது முடியும் என்று சொல்ல முடியாது.

SRI V. SUBBIAH : கூட்டுறவு இலாகாவில் பரவலாக இம் மாதிரி எல்லா செக்‌ஷன்களிலும், ஸ்டோர்ஸ், மார்கெடிங் சொசைடிகள் முதலியவைகளில் இந்தக் குறை ஜாஸ்தியாக இருக்கிறதே, அதற்குக் காரணம் என்ன ? அப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது கூட்டுறவு இலாகாவில் மட்டுமல்ல, மற்ற சர்க்கார் இலாகாக்களிலும், தனிப்பட்டோர் ஸ்தாபனங்களிலும் ஏற்படுகிறது; வருஷா வருஷம் ஆடிட் செய்யப்படுகிறது. அப்படி ஆடிட் செய்யப் பட்டபோது தான் இந்தப் பணக் குறைவு கண்டுபிடிக்கப் பட்டது. அதன் பேரில் விசாரணை நடத்தப்பட்டது, நடவடிக்கை எடுக்கப் பட்டது.

*Actors and Technicians (award of prizes)*

* 1022 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have any proposal to award prizes for the best actors and technicians; and

(b) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.